[12th December 1961

*Thefts (Arani Bazaar)*

* 2254 *Q.*—**Sri S. M. ANNAMALAI :** கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

வடாற்காடு மாவட்டம், ஆரணி பஜாரில் திருடு போனதை யொட்டி 8—6—1961, 25—9—1961-ல் கொடுக்கப்பட்ட புகார்களின் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : According to the Superintendent of Police, North Arcot, the first complaint of theft was made before the Sub-Inspector of Police, Arni Town Police Station, on 9th June 1961 and not on 8th June 1961 as stated by the hon. Member. The two complaints preferred before the Sub-Inspector of Police, Arni Police Station, on 9th June 1961 and 25th September 1961 were investigated and referred as complaints of civil nature and non-cognizable as no criminal case had been made out.

**Sri S. M. ANNAMALAI :** இந்தப் புகாரை லோகல் போலீஸ் சரிவர விசாரிக்கவில்லை என்று சொல்லப்படுகிறது. லோகல் போலீஸ் சாதகமாக இருப்பதின் காரணமாக பட்டப் பகலில் பூட்டை உடைத்து உள்ளே இருக்கிற பொருள்களை எடுத்துச் சென்றதாக அந்தப் புகாரில் கூறப்பட்டிருக்கிறது. ஆகவே, இந்தப் புகாரை டி.எஸ்.பி-ஐக் கொண்டு புலன் விசாரணை செய்ய ஏற்பாடு செய்யப்படுமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** அதற்கு ஒன்றும் அவசியம் இல்லை. அம்மாதிரி புகார்களுக்கு ஆதாரம் இல்லை. பஞ்சாயத்துதாரர்கள் முன்னிலையில் நடந்தது. இது திருடு அல்ல. ஏதோ அவர்களுடைய சொந்த விவகாரங்கள், அதனால் தங்கள் உரிமையைக் கொண்டாடி அதைக் கைப்பற்றினார்கள் என்று தான் ஏற்பட்டது. ஆகையினால், போலீஸ் கிரிமினல் வழக்கு தொடருவதற்கு இதிலே இடம் இல்லை.

*Community Development Scheme*

* 2255 *Q.*—**Sri V. K. KOTHANDARAMAN :** கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சமுதாய அபிவிருத்தி திட்டத்தைப்பற்றி மைசூரிலும், பவானிசாகரிலும் இதுவரை எவ்வளவு பேர்களுக்கு (1) புத் தொழிப் பயிற்சியும் (2) ஆய்வு முறை பயிற்சியும் கொடுக்கப் பட்டது ?

(இ) அதில் அதிகார பற்றற்றவர்கள் எத்தனை பேர்கள் ? பற்றில்லாதவர்கள் எத்தனை பேர்கள் ?

(உ) பயிற்சி ஆங்கிலத்திலா, தமிழிலா ?

(எ) பயிற்சி கொடுக்கப்படுவதன் நோக்கமென்ன ?